Registered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 34—No. 9



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ புரட்டாசி 1961 செப்டம்பர் | இதழ் 9

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

## சமாஜ அறிக்கை

பழனியில் சமாஜ ஆண்டு விழா: பழனி சைவ சித்தாந்த சபையினர் 'இந்த ஆண்டு சமாஜ விழாவைப் பழனியில் 1961 டிசம்பர் 30, 31, 1962 ஜனவரி 1, இம் மூன்று நாட்களிலும் நடத்திக் கொடுப்பதாக ஏற்றுக் கொண்டபடி நடத்துவதாக முடிவு செய்யப்பட்டது.

சமாஜச் செயற்குழுக் கூட்டம்: சமாஜ ஆண்டு விழாத் தலைவர், மங்கையர் மாநாட்டுத் தலைவியர், இளைஞர் மாநாட்டுத் தலைவர், சொற்பொழிவாளர்கள் இவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகச் செயற்குழுக் கூட்டம் வழக்கம் போல் கடைசி ஞாயிறன 24-9-61 காலை 9-30 மணிக்கு, மயிலாப்பூர் கிழாத வீதி, வணிக வைசிய மண்டபத்தில் நடைபெறும். முக்கியமான பொருள்களைப் பற்றிப் பேச வேண்டியிருப்பதால் சமாஜச் செயற்குழு உறுப்பினர் தவருமல் வரும்படியாகக் கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள்.

—ஜி. கலியாணம், செயலாளன்.

---

## சமாஜ வெளியீடுகள் விற்பனை

கிடைக்கக் கூடிய சமாஜ வெளியீடுகளின் பட்டியல் வேருெரு இடத்தில் தரப்பட்டிருக்கிறது. இந்த அரிய பதிப்புக்களை அன்பர்கள் உடனே வாங்கிப் பயன் அடையவும்.

பிரதிகள் வேண்டுபவர்கள் முன் பணமாக விலையும் அஞ்சல் செலவும் சேர்த்து அனுப்ப வேண்டும். வி. பி. பி. யில் சாதாரணமாக அனுப்ப இயலாது. நேரிலும் பணம் தந்து நூல்களைப் பெற்றுக்கொள்ளலாம். நூல் விற்பனைக் கடிதப் போக்கு வரவு கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும். பேர், முகவரி முதலியன தெளிவாக எழுதவும்.

செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம் .
14, வாரன் சாலை, மயிலாப்பூர், சென்னை-4.

---

## செய்திச் சுருக்கம்

சித்தியார் வகுப்பு: சென்னை, தியாகராயநகர், உஸ்மான் ரோட்டிலுள்ள தருமபுர ஆதின சமயப் பிரசார நிலையத்தில், சென்ற ஓராண்டுக்கு மேல் 'சிவஞான போத'

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபோன் எம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 34 | பிலவ புரட்டாசி 1961 செப்டம்பர் | இதழ் 9

## இலக்கணத்திற் கற்பனைகள்

(முருகவேள்)

(முற்றொடர்ச்சி : மலர் 34, இதழ் 8, பக்கம் 281)

உடம்படு மெய் : தமிழிலக்கணம் தத்துவக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட தென்பது,[1] முன்னரே குறிப்பிடப்பெற்றது. தத்துவ நூல்கள் உடம்பு வேறு உயிர் வேறு எனக் கூறுகின்றன. சடப் பொருளாகிய உடம்பின்கண் சித்துப் பொருளாகிய உயிரானது இடம் பெற்று ஒன்றி நிற்பதனாலேயே, உலகியல் வாழ்க்கை நடை பெறுகின்றது. "அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு" எனவரும் திருக்குறளும் இவ்வுண்மையை யுணர்த்தும். உயிரும் உடலும் தனித் தனியே நிற்பிற் பயனில்லை. அவை இரண்டும் ஒன்று சேர்ந்து இயங்குதல்வேண்டும். உடம்பின்கண்

1. "Philosophy is the marrow of the Tamil grammar and language. Even a cursory glance of that ancient grammar Tholkappiyam will convince that the grammatical terminology employed in it, are the identical philosophical terminology necessary for dealing with the grammar of the phenomena of life. If in place of the alphabet, words and sentences treated in that grammar, their corresponding mystic equivalents in philosophy are substituted, the Sutras or the rules of Tholkapppiyam expound the phenomena of life, instead of the phenomena of the Tamil language."
—*P. V. Manickam Naicker*, B.E., M.C.I.

உயிர்வந்து சேர்ந்து ஒன்றி நின்று இயங்குவதே, உலக வாழ்வில் நாம் காணும் இயல்பு. இவ் வாழ்வியல் உண்மையினையே "உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே" என்னும் நூற்பாவும் உணர்த்துகின்றது. இந்நூற்பாவானது தத்துவச் செய்தியினையும் தமிழிலக்கண விதியினையும் ஒருங்கே உணர்த்தி நிற்றல் காணலாம். அரன்+அருள் என்னும் தொடரின் நிலைமொழி ஈற்றிலுள்ள 'ன்' என்னும் உடலின்மேல் 'அருள்' என்னும் வருமொழியின் முதலிலுள்ள 'அ' என்னும் உயிரானது வந்து சேர்ந்து, அவ்விரண்டெழுத்துக்களும் தனித் தனியாக நில்லாமல், அரனருள் எனப் புணர்ந்து, னகர உயிர்மெய்யாகிய ஓரெழுத்தாக ஒன்றி விடுகின்றன. மேற்குறித்த நூற்பாவின் பொருள் இதுவேயாகும். இதன்படி, உடலும் உயிரும் ஆகிய எழுத்துக்கள் மட்டும் தம்முள் ஒன்றுசேருமேயன்றி, உயிரும் உயிரும் தம்முள் ஒன்றுசேரமாட்டா என்பது பெறப்படும். இது தத்துவம் இலக்கணம் என்னும் இரு திற நூற்கும் பொருந்தும் உண்மையாகும்.

"இருவர் மடந்தையர்க்கு என்பயன்? இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி யுறின்"

எனத் திருவருட்பயன் கூவதும், ஈண்டு ஓராற்றான் எண்ணியுணர்ந்து இன்புறற் பாலது. உயிரும் சிவமும் ஒன்று கூடிய வழியேயன்றி, உயிரும் அருளும் கூடுதல் மாத்திரத்தால் மட்டும் இன்பம் விளையாது என்பது இதன்பொருள்.

இவ்வாறு உயிரும் உயிரும் தம்முட் சேரமாட்டாமையால், அவற்றுக்குப் பற்றுக்கோடாக ஓர் உடல் இன்றியமையாது வேண்டப்பெறும். இங்ஙனம் இரண்டு உயிர் எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து உடன்படுதற்குத் துணைபுரியும் மெய்யெழுத்தே 'உடம்படுமெய்' என்னும் குறியீட்டான் வழங்கப்படும். அவ்வனம் உடம்படு மெய்யாக வரும் எழுத்துக்கள் இரண்டேயாம். அவை வ் ய் என்பனவாகும். மணி+அழகு=மணியழகு எனவும், சே+அடி =சேவடி எனவும், இரண்டு உயிரெழுத்துக்களை ஒன்று சேர்த்தற்கு இவ்வுடம்படுமெய் யெழுத்துக்களைப் பயன் படுத்தும்முறை, தமிழ்மொழியின் முற்போக்கான தூய்மை நெறிச் சிறப்பினை யுணர்த்தி நிற்கின்றதெனப் பேரறிஞர்

திரு. கால்டுவேல் அவர்கள் புகழ்ந்து கூறுகின்றார்.[2] உடம்படு மெய்யாக வரும் இவ் வகர யகரங்களே, மந்திர மொழிகளில் முறையே அருளையும் உயிரையும் குறிப்பனவாக வருதல், வியப்பிற்குரியதாகத் திகழ்கின்றது என ஆராய்ச்சியறிஞர் திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் கூறுவதும் ஈண்டு நாம் உணர்ந்துகொள்ளத் தக்கது.[3] 'உடம்படு மெய்' என்னும் இத்துணைச் சிறந்த இலக்கணக் குறியீட்டினை ஆசிரியர் கச்சியப்ப முனிவரர், தாம் இயற்றிய தணிகைப் புராணத்திற் களவுப் படலத்தில் அழகுறக் கையாளுகின்றார் :

" சடம்படும் ஆவியும் ஆவியும் ஆயிற்சந் திக்க, இடை
உடம்படு மெய்ஒன் றுறவேண் டுவது;உட லோடுயிர் வந்து
இடம்படு மாயின் இடையொன்று வேண்டுவ தெற்றுக்கு? அண்
மடம்படு கண்ணிக்கு நீயே மொழிய வலித்தி யின்றே " [றால்!

தலைவன் தலைவியின் அன்பைப்பெறத் தோழியின் உதவியை நாடுகின்றான். அற்கு அவள், 'நீயே தலைவியின்பாற்சென்று உன் காதலைத் தெரிவித்துக்கொள். உயிரும் உயிரும் ஆகிய எழுத்துக்கள் கூடுதற்குத் தான் இடையில் ஓர் உடம்படு மெய்யெழுத்து வருதல்வேண்டும். ஆனால், உடலும் உயிருமாகிய எழுத்துக்களோ தாமே இயல்பாக ஒன்று சேர்ந்துவிடும். நீயும் நின் தலைவியும் உடலும் உயிரும் போல்வீர்கள். ஆதலின் நின் காதலை யான் சென்று தலைவிக்குக் கூறுதல் முறையாகாது, என மறுத்துக் கூறிவிடுகின்றாள். " அவன் அறிவுறுக்க என்று இகுளை அகற்றல் " என்னும் இவ் வகப்பொருட்டுறையின் கருத்தினை, இங்ஙனம் இலக்கண நூற்பொருள் கொண்டு தமது புலமைநலந் தோன்ற

---

2. "This use of *v* in one conjunction of vowels, and of *y* in another, is doubtless a result of the progressive refinement of the language."

—*Rt. Rev, RobertCaldwell*, D.D., LL.D.

3. "The same two letters வ and ய occur in Manthras where they are termed as Grace and Soul letters respectively, with the aid of which the emancipation or the annihilation of births is attained."

—*The Tamil Alphabet, Its Mystic Aspect.*

விளக்கிய கச்சியப்ப முனிவரின் கற்பனைத்திறம் பெரிதும் பாராட்டுதற் குரியது.

இங்ஙனமே இவர், தலைவனும் தலைவியும் உடலால் இருவர், உயிரால் ஒருவர் எனக் கழிபெருங் காதற் கேண்மையிற் சிறந்துதிகழும் திறனை விளக்குதற்கும், பன்னிருயிரும் பதினெண் மெய்யும் ஆகிய எழுத்துக்களினெல்லாம் அகரவுயிர் விரவிநிற்கும் இலக்கணச் செய்தியினை உவமை கூறியிருத்தல், உணர்ந்து இன்புறுதற் குரியது :

" பன்னீ ருயிரும் பதினெண் ணுடலும் பயின்றியக்கும்
அந்நீர் எனஅடல் வேலோன் றனக்கும், அமிழ்துயிர்க்கும்
முந்நீர்த் தரள முறுவல் முரிபுரு வத்திவட்கும்
நன்னீர் உயிர்ஒன்று, மெய்இரண் டாகி யமர்ந்தவே "

சந்தி : தமிழிலக்கணத்திற் சந்தி என்பது ஒரு தனிச் சிறப்பான பகுதி. சந்தி எனினும் புணரியல் எனினும் ஒன்றே. சந்தி இலக்கண விதிகளைப் பயிலுவதுதான் இளம் மாணவர்களுக்குத் தமிழிற் சிறிது கடினமாக இருக்கும். தமிழிற் போதிய அறிவு பெற்றவர்களும்கூட, ஒரோவழி சந்திப் பிழைகள் நிகழ எழுதுவர். மக்கள்தலை மக்கட்டலை, வடுகக் கண்ணன் வடுகங் கண்ணன், கார்த்திகைத் திங்கள் கார்த்திகை திங்கள், எகினங்கோடு எகினக்கால் என்பனபோலும் தொடர்களில், சந்தி வேறுபாட்டால் அவை குறிக்கும் பொருள்களும் வேறுபடுதல் காணலாம். இத்தொடர்கள் முறையே உயிருள்ள மக்களின் தலை உயிரையிழந்த மக்களின் தலை, வடுக நாட்டிற் பிறந்த கண்ணன் வடுகனுக்கு மகனாகிய கண்ணன், கார்த்திகை யாகிய மாதம் கார்த்திகை மாதமும் திங்கட்கிழமையும், எகினமரத்தின் கிளை எகினப் பறவையின்கால் என்னும் பொருள்களை யுணர்த்தும். இங்ஙனம் பொருள் வேறுபாடுகளைக் குறிக்கும் திறத்தால், சந்தி இலக்கணப் பகுதி யானது தமிழ்மொழிக்கு எத்துணைச் சிறப்பும் முதன்மையும் வாய்ந்தது என நாம் உணர்ந்துகொள்ளலாம்.

இதுபற்றியே, தக்க தமிழறிஞர்கள் "தமிழைச் சந்தியில் விடுதல் பெரும் பிழை" என இருபொருள் அமைய அவ்வப் போது கூறுவர். சந்தியின் சிறப்பினைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், தாம் இயற்றிய 'திருவெங்கை யுலா'

வில் சுவைமிகப் புலப்படுத்துகின்றார். திருவெங்கைத் தலத்தில் அண்ணாமலை ரெட்டியார் என்னும் சிவநேசர் ஒருவர் அரிதின் முயன்று கட்டுவித்த திருக்கோயிலின் சிறப்பை விளக்க முற்படும் சிவப்பிரகாச சுவாமிகள், அத்திருக்கோயிலுக்கு நல்லிசைப் புலவர் ஒருவர் நயமுற இயற்றிய செய்யுளை உவமைகூறி மகிழ்கின்றார்! திருக்கோயிலின் அமைப்பும் சிறப்பும் சுவாமிகளுக்கு வேறு எதனை நினைவூட்டும்? செய்யுட்கள் பாடிப் பாடிக் கைவந்து தேர்ந்த சுவாமிகளுக்குச் செய்யுளைப் பற்றிய நினைவே மிக்கு எழும் என்று சொல்லுதலும் வேண்டுமோ?

கோவில் கட்டுவோர் இடைவெளி ஏற்படாதவாறு கற்களை வைத்துச் சந்தி பொருத்துவர்; சீர்கெடாமல் அடுக்கி ஒழுங்கு படுத்துவர்; அற்புதமும் அழகும் மிக்க அரிய பல சிற்ப வேலைப்பாடுகளைச் செய்வர். அவ்வாறே செய்யுள் இயற்றும் கவிஞர்களும் சொற்களைச் சந்தி பிழையாது பொருத்தமுற அமைப்பர்; செய்யுளியலுக்கு ஏற்பச் சீர்கள் கெடாது அடுக்குவர்; அச் செய்யுட்களில் தமது கற்பனைத் திறனாற் புலவர்கள் புகழ்ந்துபோற்றும் வண்ணம் உவமை உருவகம் முதலிய அற்புத அணிகலங்கள் பலவற்றைப் பொருந்தச் செய்வர். இன்னோன்ன ஒப்புமைத் தன்மைகள் பலவற்றையும் எண்ணிச் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த,

"சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழ்அற் புதஅணித்தாய்—முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயில்..."

எனவரும் திருவெங்கை யுலா வரிகள் எத்துணைக் கற்பனை நயம் மிக்குத் திகழ்கின்றன. இதன்கண், நம் சிவப்பிரகாசர் வாளா "செய்யுள்போல்" என்று கூறி யமைந்து விடாமல், "முந்தையோர் செய்யுள்போற் செய்த திருக்கோயில்" என்று விதந்து அருளிச் செய்திருப்பதனை எண்ணுந்தொறும் அவர்தம் தன்னடக்கமும், முன்னோர்கள் பால் அவர் கொண்டிருந்த அன்பும், நன்கு மதிப்பும் பிறவும் புலனாதல் உணரலாம்.

குற்றியலுகரம்: தமிழ் மொழிக்குச் சிறப்பாக உரியனவற்றுள் குற்றியலுகரமும் ஒன்றாகும். தமிழின் சார்

பெழுத்துக்கள் மூன்றனுள் ஒன்றாகத் தொல்காப்பியர் இதனைக் குறித்துள்ளார். அன்றியும் "குற்றியலுகரப் புணரியல்" என்று தனியாக ஓரியலும் இதனைக் குறித்து அமைத்திருக்கின்றார். தமிழின் இனிய எளிய நுண்ணோசைத் திறனை விளக்குவது குற்றியலுகரம் எனலாம். வடமொழியில் வாக் (பேச்சு), அப் (நீர்) என வழங்குவன, தமிழில் வருங்கால் 'வாக்கு' 'அப்பு' எனவே வழங்கப்படும். இவ்வாற்றாற் குற்றியலுகரம் ஒலியெளிமை இனிமைகட்குப் பெரிதும் பயன்படுதல் உணரப்படும். இந்தோ ஐரோப்பிய மொழிகளிலோ வட மொழியிலோ குற்றியலுகரம் இல்லை.[4] தென்னிந்திய மொழிகளில், அவற்றுள்ளும் சிறப்பாகத் தமிழிலேயே குற்றியலுகரம் உள்ளது. குற்றியலுகர எழுத்தமைப்பினால், பண்டைத் தமிழ் மக்கள் ஒலியியல் (Phonetics) துறையில் மிக நுண்ணிய ஆராய்ச்சி கைவந்தவர்கள் என்பது புலனாகின்றது. குற்றியலுகரம் அரை மாத்திரை ஒலியுடையது. ஆயினும், 'செக்குக்கணை' 'சுக்குக் கோடு' என்றாற்போன்ற தொடர்களில் அவ்வரைமாத்திரையிலும் கூட அது குறுகி ஒலிக்கும். இதனை,

"இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான"

என்னும் நூற்பாவாற் குறித்தார் தொல்காப்பியர். இவ்விலக்கணநூற் செய்தியை ஆசிரியர் கச்சியப்ப முனிவர் பின்வரும் தணிகைப் புராணச் செய்யுளின்கண் சுட்டுகின்றார்:

"குற்றியல் உத்தொடர் வல்லினம் முன்பின் குறுகநிற்பிற்
குன்றுவ துள்ள அளவையின்; நின்னொடு கோற்றொடியைக்
குன்றிறு ஈர்த்தவன் ஆரியர் நன்கு குறிக்கினும், எம்
குன்றவர் வன்குலம் குன்றவ, புன்சொற் கொழுந்தெழுமே."

தலைவன் தோழிபாற் பல்காற் சென்று, தலைவியைத் தான் அடையுமாறு செய்வித்து உதவ வேண்டுகின்றான்.

---

4. "Short *u* is of all vowels the weakest and lightest, and is largely used, especially at the end of words, for euphonic purposes, or as a help to enunciation. It is obviously quite foreign to Indo-European usages. It is not derived from Sanskrit, and is opposed to Sanskrit laws of sound."—*Dr. Caldwell.*

தோழியோ ஒவ்வொரு நாளும் வெவ்வேறு காரணம்கூறித் தலைவனைச் சேட்படை செய்து போதருகின்றாள். அந்நிலையில் தலைவன் ஒருநாள் வழக்கம்போல் தோழியின்பாற் சென்று குறையிரந்து மன்றாடி நின்றான். அதுபோது தோழி, 'நீ எம் தலைவியை அடைய விரும்புகின்றனையாயினும், உயர்குலத்துப் பெருங்குடியில் உதித்த நினக்கு, எம் தலைவி ஏற்றவள் ஆவளோ? யாங்கள் இக் குன்றிடத்து வாழும் சிறுகுடி மக்களாயிற்றே! இயல்பாகவே ஒலியளவிற் குறைந்து நிற்கும் குற்றியலுகரம், தன் முன்னும் பின்னும் வல்லெழுத்துக்கள் வருங்கால், தனக்குரிய அரை மாத்திரை யளவிலேயே மேலும் குறைந்து கால்மாத்திரை பெற்றுநிற்கும். அங்ஙனமே யன்றோ, உயர்குலத்துப் பெருங்குடியில் உதித்த நின்னை மணத்தலால், எம் தலைவி சிறுமையுற நேரும்? எம் குலத்தினருக்கும் வீண் பழிச்சொல் உண்டாகும்?' என வினவித் தலைவனை மறுத்துரைப்பதாக இச் செய்யுள் அமைந்துள்ளது. பிற கவிஞர்கள் பாடிச்சென்ற முறைகளினும் புதுவதான முறையில், தமது இலக்கண நூற் புலமைநலந் தோன்ற, இத்துறையினைக் கச்சியப்ப முனிவர் பாடியிருக்கும் கற்பனைத்திறம் சாலவும் போற்றத் தகுந்தது.

ஆய்தக் குறுக்கம் : தமிழிலுள்ள ஆய்தம் என்னும் எழுத்து, மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்த தொன்றாகும். அது பற்றியே அது 'தனிநிலை' எனப் பெயர் பெற்றது.

"ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்"

எனத் தொல்காப்பியம் கூறுதலின், ஆய்தம் என்பது மிக நுணுகிய ஓசையுடையதாதல் பெறப்படும். எழுத்தோசைகளுக் கெல்லாம் காரணமாகிய மூச்சொலியே ஆய்தம் ஆகும். அது, தான் சார்ந்துவரும் ஒலியின் தன்மையோடு ஒத்தியலும் இயல்பினது. தமிழ் நெடுங்கணக்கில் உயிரெழுத்துக்களுக்கும் மெய்யெழுத்துக்களுக்கும் இடையே ஆய்தம் வைக்கப் பெற்றுள்ளது. மாணிக்கத்துக்கும் மரகதத்துக்கும் இடையே யுள்ள படிகமானது மாணிக்கத்தின் ஒளியால் மாணிக்கம் போலவும், மரகதத்தின் ஒளியால் மரகதம் போலவும் காட்டி, அவ்விரண்டும் ஆகாமை போல, ஆய்தமானது உயிரியைபு பற்றிச் சில இடத்து உயிர் போலவும்,

மெய்யினையு பற்றிச் சில இடத்து மெய் போலவும் நின்று, உயிரும் ஆகாமல் மெய்யுமாகாமல் இரண்டற்கும் இடைப் பட்டுத் தனியே நிற்பதாகலின், தனிநிலை எனப் பெயர் பெற்றமை பொருத்தமேயாம். "அற்றால் அளவறிந்துண்க அஃதுடம்பு பெற்றான் நெடி துய்க்குமாறு" (குறள் 948) என்புழி உயிர் போலவும், "தெரிந்தோம்பித் தேரினும் அஃதே துணை" (குறள். 132) என்புழி மெய் போலவும் ஆய்தம் அமைந்துள்ளமை காணலாம்.

இவ் வாற்றால் ஆய்த எழுத்து, உயிர்களின் இயல் பாகச் சைவ சித்தாந்தம் கூறும் "சார்ந்ததன் வண்ணமாம் தன்மை"யினை விளக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்ற தெனலாம். இவ்வாய்த எழுத்தினைத் துணை கொண்டு, எல்லா மொழிகளின் சொற்களையும் மிகவும் எளிதாக ஒலித்தல் கூடும் என்பர் அறிஞர். நான்கு ஐந்து ஆறு ஆயிரம் என்னும் எண்களைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்களின் ஒலியை, முறையே ஃபோர் ஃபைவ் ஃசிக்ஃச் தௌஃசண்ஃட் எனக் குறிக்கலாம் என்பது தமிழறிஞர்கள் சிலரின் கருத்து. இவ்வடிப்படையில்,

"பஜமுன் ஆய்தம் FZ ஆகும்"

என ஒரு புது விதியும் கூட வகுக்கப்பட்டுள்ளது. இவை எங்ஙனமாயினும், ஆய்தம் பற்றிய விதி ஒன்றினைத் துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், தமது பிரபுலிங்க லீலை என்னும் நூற் செய்யுள் ஒன்றில் அழகுறக் குறிப்பிடு கின்றார்.

ஆய்தம் அரை மாத்திரை ஒலியளவுடையது. அது சில விடத்துக் கால் மாத்திரை பெற்று வருதலும் உண்டு. அப் போது அதனை "ஆய்தக் குறுக்கம்" என்பர். ஆய்தக் குறுக்கம் இரண்டு. அவை முறையே கல்+தீது=கஃறீது, முள்+தீது=முஃடீது எனவரும் புணரியல் திரிபுகளாம். இதனை,

"குறில்வழி லள,த அணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே"

எனவரும் நன்னூற் சூத்திரம் உணர்த்தும். இந் நன்னூற் சூத்திர விதியினை,

“ குறில்வழி லகரம் தனிநிலை யாயும்
கூடிய தகரமுன் னேழுத்தேன்
றறிதுறி வடிவம் திரிதல்போல், நந்தி
அடல்விடை மெய்திரிந் தறினும்
நறுமலர் விழியிற் கண்டவர் எல்லாம்
நந்தியே என்றுளம் மகிழ்ந்தார் !
பெறுதவம் முயன்ற அன்னையும் பிதாவும்
பெறும்உவ கையினையார் உரைப்பார்?”

எனவரும் பிரபுலிங்கலிலைச் செய்யுள் எடுத்தாண்டுள்ளது. கஃறீது முஃடீது என்னும் தொடர்களில் ஆய்த எழுத்தே காணப்படுகின்றதாயினும், அது முன்னர் இருந்த லகர தகரங்களின் திரிபேயாதல் எளிதின் உணர்ந்து கொள்ளப் படுமாறு போல, இங்குளாபுரி எனும் நகரில் மாதரசன் மாதாம்பிகை என்னும் தாய் தந்தையர்க்கு மைந்தராகத் தோன்றியருளிய வசவதேவரை, அவர்தம் செயலும் இயலும் கண்டவர் அனைவரும், அவர் முன்னைய நிலையில் கயிலையில் திருநந்தி தேவராக விளங்கியிருந்தவர் என உணர்ந்து மகிழ்ச்சியுற்றனர் என்பது இச் செய்யுளின் பொருள். திருநந்தி தேவரே வசவதேவராக வந்து தோன்றி யருளினர் என்னும் வீரசைவ சமயக் கருத்தினையுணர்த்துங் கால், ஆய்தக் குறுக்கம் பற்றிய இலக்கணச் செய்தியினை எடுத்தாண் டிருக்கும் சிவப்பிரகாசரின் செய்யுட்டிறம் பெரிதும் பாராட்டற்பால தொன்றன்றே !

தாள் + தலை = தாடலை : இவ்வாறே, கொற்றவன்குடி உமாபதிசிவம் என்னும் சான்றோரும் தமது திருவருட்பயன் எனப் பெயரிய சிறந்த நூலின்கண், சைவ சித்தாந்த உண்மை யொன்றனை இலக்கண நூற் செய்தி கொண்டு விளக்கியருள்கின்றார். ‘தாடலை’ என்னும் சொல் தாள் + தலை எனும் சொற்களின் புணர்ப்பாகும், ‘தாடலை’ என்பதன்கண் உருக்கரந்துள்ள ள் + த என்னும் இரண்டு எழுத்துக்களும், ஒரு வகையிற் கெட்டும் பிறிதொரு வகை யிற் கெடாமலும் நிற்கின்றன. எனவே, சைவ சித்தாந்த வீடுபேற்றியல் நிலையினை விளக்கும் உவமையாகத் ‘தாடலை’ என்னும் இத் தொடரை, ஆசிரியர் உமாபதிசிவனார் எடுத் தாளுகின்றார்.

உலகாயதர் மகளிர் இன்பமே முத்தி என்பர். பௌத்தர் கந்தம் ஐந்தும் அறுதலே முத்தி என்பர். சமணர் முக்குணங்களும் அடங்குதலே முத்தி என்பர். வினைகெடுதலே முத்தி என்பர் பிரபாகரர். மலம் கெட்டொழிதலே முத்தி என்பர் பேதவாதிகள். சுத்த மாயையினுலாகிய உடல் அழியாமல் நிலைபெறுதலே முத்தி என்பர் உருவசிவசமவாதிகள். சாங்கியர், மாயாவாதிகள் ஞானம் பெறுதலே முத்தி என்பர். பாற்கரியர் பிரமத்தோடு கலந்து உயிர் கெட்டுப் போதலே முத்தி என்பர். ஆன்மா பசுகரணங் கெட்டுச் சிவகரணம் ஆதலே முத்தி என்பர் சிவசங்கிராந்தவாதிகள். அட்டமா சித்திகளை உயிர்கள் அடையப் பெறுதலே முத்தி எனச் சிலர் கூறுதலும் உண்டு. உயிரானது சுத்தாவத்தையினும் அறிவு செயல்கள் இன்றிக் கல்லைப் போற் கிடத்தலே முத்தி என்பது பாடாணவாதியர் கொள்கை. இங்ஙனம் பலரும் கூறும் கொள்கைகள் எல்லாம் சைவ சித்தாந்தத்திற்கு உடன்பாடுடையன அல்ல.

"இம்மையே ஈரொட்டாண் டெய்திஎழி லாரும்
 ஏந்திழையார் முத்திஎன்றும், இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே என்றும், முத்தி ஐந்து கந்தம்
 அறக்கெடுகை என்றும், அட்ட குணம்முத்தி என்றும்,
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி என்றும்,
 விவேகம்முத்தி என்றும், தன் மெய்வடிவாம் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி என்றும், செப் புவர்கள்.
 சிவனடியைச் சேரும்முத்தி செப்புவதுஇங்கு யாமே!"

எனச் 'சிவஞான சித்தியார்' கூறுதற்கு ஏற்ப, உயிர்கள் சிவபிரான் தாளைத் தலைப்படுவது தான், சைவ சித்தாந்தம் கூறும் முத்தித் திறம் ஆகும். இதனைச் சுருக்கமாகவும் நுட்பமாகவும் விளக்குவதே 'தாடலை' என்னும் தொடர். தாள், தலை என்னும் சொற்களால் முறையே இறைவனது உயர்வும் உயிர்களின் தாழ்வும் புலப்படுத்தப்பட்டன. வீட்டு நிலையில் இறையும் உயிரும் "ஒன்றாகாமல்—இரண்டாகாமல்—ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்" இயைந்து நிற்கின்றன.

இந்நிலையினையே 'அத்துவிதம்' என்பர். உயிர் இறைவனோடு கலந்து ஒன்றாகிவிட்டால், பெறுவானும் பேறும் இல்லையாய் உயிர் கெட்டொழிந்ததென முடியும். இறை

வனும் உயிரும் இரண்டாகவே நிற்பின், அது கட்டுநிலை போல்வதே யன்றி வீட்டுநிலையாகாது. எனவே, உயிரானது ஞாயிற்றின் முன்னர்த் திங்களின் ஒளிபோல இறையருள் நிறைவிற் கலந்து விளங்குதலால் ஒன்றாகியும், இறையருளின்பத்தை நுகர்ந்து திளைத்துக் கொண்டிருத்தலால் இரண்டாகியும் நிற்கும். இவ்வீடு பேற்று நிலையினையே விரும்பி வக்கற்றுத் தாயுமான அடிகள்,

“ ஒன்றிரண்டும் இல்லதும் ஒன்றிரண்டும் உள்ளதுமாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ ?”

என அருளிச் செய்தனர். இத்தகைய வீடு பேற்று நிலையின் இயல்பினையே ‘ தாடலை ’ என்னும் தொடர் அழகுற விளக்குகின்றது. தாள் தலை என்னும் சொற்கள் இரண்டும் தம்மிற் புணருங்காலத்து, ளவ்வும் தவ்வும் தோன்றாமல் டவ்வாய் நின்றது போல, தற்போதம் நிகழாது சிவபோதம் நிகழும் நிலையே பேரின்பம் ஆகும் எனத் திருவருட்பயன், உயிர் இறைவனின் தாளைத் தலைப்பட்டு ஒன்றாகி நிற்கும் வீடுபேற்று நிலையின் இயல்பினை விளக்குகின்றது.

“ நாடலைபோற் கூடியவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலை ஏகம்எனக் கொள்.”

உயர்திணை அஃறிணை : பழந்தமிழ் இலக்கண நூலாசிரியர்கள், உலகத்துப் பொருள்களை யெல்லாம் உயர்திணை அஃறிணை என இருவகையாகப் பிரித்தனர். உயிரும் அறிவுமுடைய பொருள்கள் உயர்திணை எனவும், உயிரில்லாத பொருள்களும் உயிருந்தும் அறிவில்லாத பொருள்களும் அஃறிணை எனவும் வழங்கப் பெற்றன. எனவே, உயர்திணை அஃறிணை எனும் பழந்தமிழ்ச் சான்றோர்களின் குறியீடானது, அறிவின் சிறப்பை அடிப்படையாகக் கருத்திற்கொண்டு அமைக்கப் பெற்றமை தெளியலாம். ஆசிரியர் தொல்காப்பியர் சொல்லதிகாரத்தின் கண், சொற்கள் உயர்திணை அஃறிணை என்னும் இவ்விரு திணையின் கண்ணும் நிகழும் என்பதனை,

“ உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே ”

என்னும் நூற்பாவால் உணர்த்துகின்றார். இதன் கண்

'உயர்திணை என்மனார் மக்கள்' என்ற அளவே கூறியமை யாமல், 'மக்கட்சுட்டு' என அவர் விதந்து கூறியுள்ள நுட்பம் பெரிதும் வியத்த போற்றற்பாலது.5

ஒரு சிலர் வடிவத்தால் மக்களாகக் காணப்படுவராயி னும், பண்பால் விலங்கினும் இழிந்தவராக இருப்பர். ஒரு சில உயிர்கள் வடிவத்தால் விலங்கு முதலியனவாக இருப் பினும் தம்முடைய பண்பின் சிறப்பால் மக்களினும் மேம்பட்டுத் திகழ்வதுண்டு. எனவே, உறுப்பொப்புமை ஒன்றே பற்றியன்றிப் பண்பொப்புமை பற்றியும் கருதியே, ஒரு பொருளை உயர்திணை என்றோ அஃறிணை என்றோ வழங்குதல் வேண்டும் எனத் தொல்காப்பியர் 'மக்கட் சுட்டு' எனக் கூறிய விதப்பாற் புலப்படுத்தி யருளினர். இந்நுட்பம் உணர்ந்து தழுவியே,

"உறுப்பொத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு"

"அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்"

என ஆசிரியர் திருவள்ளுவர் அருளிச் செய்தனர்.

"தக்க இன்ன தகாதன இன்னஎன்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்தன
மக்க ளும்விலங் கே;மறு வின்நெறி
புக்க வேல்,அவ் விலங்கும் புத்தேளிரே"

எனக் கம்பநாடர் வாலிக்கு இராமன் கூறும் மறுமொழி யாக வைத்துப் பாடியிருப்பதற்குரிய அடிப்படையும், 'மக்கட்சுட்டு' எனத் தொல்காப்பியர் விதந்து மொழிந்த குறிப்பே யாகும்.

இவற்றை யெல்லாம் உள்ளத்திற்கொண்டு யாழ்ப் பாணம் வடகோவைச் சபாபதி நாவலர் அவர்கள், தாம் இயற்றிய 'சிதம்பர சபாநாத புராணம்' என்னும் நூலின்

---

5. "The classification of nouns in Tamil is decidedly more philosophical; for the difference between rational beings and beings or things which are destitute of reason is more momentous and essential than any difference that exists between the sexes." —*Dr. Caldwell.*

கண், கற்பக விநாயகர் துதியாகப் பின்வரும் பாடலை அமைத்திருக்கின்றார் :

" ஞானம்மிக வளரின் அஃறிணைய, உயர்
திணையாகும் ; நவில்அஞ் ஞான
ஈனம்மிக வளரில்உயர் திணைய, அஃ
றிணையாகும் ; என்று தேற்றல்
மான, அஃறிணைமேலும் மாண்டஉயர்
திணைகீழும் வடிவிற் காட்டித்
தேன்அமரும் பொழிற்றில்லைச் சிகரியில்வாழ்
கற்பகத்தை வணக்கம் செய்வாம் "

அறிவில் உயர்ந்தால் அஃறிணைப் பொருள்களும் உயர்திணையாகும், அறிவில் இழிந்தால் உயர்திணைப் பொருள்களும் அஃறிணையாகிவிடும் என நம்மனோர்க்கு இனிது உணர்த்துதற் பொருட்டே, விநாயகப் பெருமான் தமது திருவுருவின் மேற்பகுதியில் யானை முகமும், கீழ்ப் பகுதியில் மனித வடிவமும் கொண்டு விளங்குகின்றார் என்பது இப்பாடலின் பொருள்.

ஆண்பால் பெண்பால் : தமிழிலக்கணத்தில் ஆண்பால் பெண்பாற்பாகுபாடு, அறிவு நெறிக்கும் இயற்கை நெறிக்கும் பொருந்த வகுக்கப்பட்டுள்ளது.6 பல மொழிகளில் இத்தகைய பாகுபாடு அறிவார்ந்த முறையில் ஒழுங்காக அமையாமல், மனஞ்சென்றவா றெல்லாம் வரையறை ஏதுமின்றி வகுக்கப்பட்டிருக்கின்றது. மனைவி என்னும் ஒரே பொருளைத் தரும் பாரியை தாரம் களத்திரம் என்னும் சொற்கள் முறையே பெண்பால் ஆண்பால் அலிப்பால் எனவும், கல் என்னும் ஒரே பொருளைத் தரும் பாடாணம் சிலை உபலம் என்னும் சொற்கள் முறையே ஆண்பால் பெண்பால் அலிப்பால் எனவும் வடமொழியிற் கொள்ளப் படுகின்றன. உயிரற்ற பொருள்களைக் கூட உயிருள்ளன போலவும், பாற்பாகுபாடு இன்றிச் சடமாகவோ அருவமாகவோ நிற்கும் பொருள்களைக் கூடப் பால்பாகு பாடு உடையன போலவும் வைத்துப் பேசிக் கற்பனை

---

6. "The peculiar law of gender which has now been described would appear to be a result of progressive intellectual and grammatical cultivation." —*Dr. Caldwell.*

நெறியிற் சொற்களுக்கு இங்ஙன மெல்லாம் செயற்கை முறையில் இலக்கணம் வகுத்துள்ள மொழிகள் தம்மைக் கற்பவர்களுக்கு விளைக்கும் இடர்ப்பாடுகளுக்கு அளவேயில்லை.[7] ஆனால் தமிழிலோ அங்ஙனமின்றி, ஆண் பெண் பாற்பகுப்பு இயற்கை யமைப்பிற்கு ஏற்பக்கொள்ளப்பட்டுள்ளது. அது தானும், தெற்றென விளங்குதலால் உயர்திணையின் மட்டுமே ஆண் பெண் பாற்பாகுபாடு கொண்டு, ஈ எறும்பு புல் பூடு முதலியனவற்றில் ஆண் பெண் என்னும் அமைப்புத் தெற்றென அறியப்படாமையால் அவற்றை விலக்கி, அஃறிணையில் ஒன்றன்பால் பலவின்பால் என்பன மட்டுமே கொண்டனர் தமிழர்.

இச்சீரிய பாற்பாகுபாட்டு நெறியின் படி, னகர ஒற்றீறு ஆண்பாலையும், ளகர ஒற்றீறு பெண்பாலையும் உணர்த்தி வரும். இதனைக் கருத்திற் கொண்டு இரட்டைப் புலவர்கள் தாம் இயற்றிய திருவாமாத்தூர்க் கலம்பகத்தில், சுவைமிகுந்த செய்யுள் ஒன்றனைக் கற்பனை நயம் தோன்றப் பாடியுள்ளனர். சிவபிரானுக்குத் திருமால் ஒருவகையில் தேவியாவர் எனச் சைவர்கள் கூறிக்கொள்வதுண்டு. திருமாலைத் தங்கள் சமயத்திற்கும் உரியவராகப் போற்றித் தழுவிக் கொள்ள வேண்டும் எனச் சைவர்கள் கொண்ட விருப்பமே அதற்குக் காரணமாக இருக்கலாம்! திருநாவுக்கரசர் பெருமான் " அரியலால் தேவி யில்லை ஐயன் ஐயாறனார்க்கே " என அருளிச் செய்கின்றார். இங்ஙனம் சைவர்கள் கூறிக் கொள்வதனைப் பிற்றை நாளில் வைணவர்கள் விரும்பவில்லை போலும்! அவர்களை நோக்கி இரட்டைப் புலவர்கள், ஒரோ வழி இகர ஈறு பெண்பாலை யுணர்த்தும் என்னும் தமிழிலக்கண விதியினைக் காட்டி, ' அரசன் அரசி கொற்றன் கொற்றி சாத்தன் சாத்தி தோழன் தோழி ஒருவன் ஒருத்தி என்னும் சொற்களைப்போல, அரன் ஆண்பாலும் அரி

---

7. "A mere tax upon the memory and an embarrassment to free literary expression, it is no wonder that German genders are a sore trial to the children, who are sometimes several years before they learn to use them correctly......"

—*Sayce, Introductin to the Science of Language.*

பெண்பாலும் ஆதல் பெறப்படுதலின், அரனாகிய சிவபிரானுக்கு அரி எனப்படும் திருமால் தேவியே யாவர்' என வேடிக்கையாகவும் சுவையமையவும் கூறுகின்றனர் :

" வருக்கைத் தடம்பொழில் மாமாதை ஐயர்க்கு மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி அழகிய நாதர்க்கு மூச்சாவத்
திருக்கைக் கமல அரனுர்க்கு அரி திருந் தேவி, அன்றேல்
அரிக்குப் பொருள்உரை யீர் ! கெடுவீர்நும் அறிவின்மையே."

பெயர்வினை இடையுரிச் சொற்கள் : ஒரு மொழியிற் பலவகைச் சொற்கள் வழங்கினும், பெயர்ச் சொல் வினைச் சொல் என்னும் இரண்டுமே முதன்மையானவை. மொழியின் உயிர்ப்புக் கூறுகள், பெயர்ச் சொல் வினைச்சொற்களே எனலாம்.[8] இவற்றிற்குப் பின்னரே இடைச் சொல் உரிச் சொற்கள் நாளடைவில் ஏற்பட லாயின. இது பற்றியே,

" சொல்லெனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே "

எனத் தொல்காப்பியனார் பெயர் வினைகளை முதலிற்கூறி, அவற்றினை யடுத்துப் பின்னர்,

" இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப "

என இடைச்சொல் உரிச்சொற்களைப்பற்றிக் குறிப்பிடுவாராயினர் என்பது.

இடைச் சொற்களாவன பெயர்க்கும் வினைக்கும் இடையேவரும் சொற்கள் எனச் சிலர் கூறுவதுண்டு. ஆனால் சிவஞானசுவாமிகள் 'பெயர்ச்சொல் வினைச் சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றன. இது பாலைத்திணை நடுவுநிலைத் திணை எனப் பெயர்பெற்றது போலும் என்க' எனவும், 'தாமே தனித்து நடத்தலின்றிப் பெயர் வினையிடமாக நடத்தலின் இடைச்சொல் எனக்

---

8. "Nouns and verbs represent the living elements of language in contradistinction to the grammatical devices-preposition, conjunctions, articles, or pronouns."
—*J. Vendryes, Language.*

காரணக்குறி போந்த தெனினும் அமையும்' எனவும் விளக்கம் கூறுவர். 'அங்ஙனமாயின் இடம் என இயற்சொல்லாற் கூறாது இடை எனத் திரிசொல்லாற் கூறுவதென்னை ?" என ஒரு வினாவை எழுப்பிக்கொண்டு, 'இயற்சொல்லாற் கூறின் இடப்பொருளை யுணர்த்தும் சொல்லெனப் பொருள்படுமாதலின், அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கு' என அவர் விடை இறுத்திருத்தலும் கண்டுணர்தற்பாலது.

இனி, உரிச்சொற்களாவன பெயர் வினைகளைத் தழுவி, இசை குறிப்பு பண்பு முதலிய பலவேறு பண்புகளையும் உணர்த்தி வருவனவாம். அவை செய்யுட் குரியனவாய்ப் பொருட்குரிமை பூண்டு நிற்றலின், உரிச்சொல் எனக் காரணப் பெயர் பெற்றன. மொழிக்கு மிக முதன்மையான பெயர் வினைகளைச் சார்ந்து தழுவி நின்றே இடையுரிச் சொற்கள் வாழ்வுபெற்று விளங்கிவருகின்றன. இவ்விலக்கணச் செய்தியினைக் கச்சியப்ப முனிவர் பின்வரும் தணிகைப் புராணப் பாடலிற் குறிப்பிடுகின்றார்.

"பெயர்வினை சேரின் இடையுரி யாங்தம் பிறங்கெழில் வாய்ந்து
அயர்வினை எய்தாது இனிது இயலா நிற்கும்; ஆரணங்கே
மயர்வினை தீர்த்தருள் வீரட்ட காசத்தெம் மான்அருளால்
உயர்வினை யேறும் குலம்என்றும் எம்மால் உறுவதுவே"

வெளிப்படை, குறிப்புச் சொற்கள் : பெயர் வினை இடையுரி என நான்காகச் சொற்களைப் பிரித்தமைபோல, ஒவ்வொரு மொழியினும் உள்ள சொற்களையெல்லாம், வெளிப்படைச் சொற்கள் குறிப்புச் சொற்கள் எனவும் இருவகையாகப் பிரிக்கலாம். 'மொழியானது கருத்துக்களை வெளியிட உதவுகின்றது என நாம் பொதுவாகக் கருதுகின்றோம். ஆனால் சில சமயங்களில் நம்முடைய கருத்துக்களைப் பிறர்க்கு வெளியாகிவிடாமல் மறைப்பதற்கும் மொழி பயன்படுகின்றது. அது மட்டுமன்றி, நம்மிடம் கருத்துக்கள் எதுவும் இல்லை என்னும் உண்மை புலனாகிவிடாமல் இருப்பதற்கும் மொழியானது துணைபுரிகின்றது' என அறிஞர் ஒருவர் நயக்தோன்ற நவில்கின்றார்.[9] அம்

---

9. "We may first call to mind three competing statements. first the every day remark that language

முறையில் நம் கருத்தை மறைப்பதற்கோ, அல்லது நமக்குக் கருத்தெதுவுமில்லை என்னும் உண்மையைப் பிறர் அறிந்து கொள்ளாவகையில் தடுப்பதற்கோ, துணைபுரியும் சொற்களே குறிப்புச் சொற்கள் எனலாம். இங்ஙனம் சொற்கள் வெளிப்படை குறிப்பு என இருவகைப்படுதலை “......வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே” எனப் பவணந்தியார் கூறுகின்றார். வெளிப் படைச் சொல் குறிப்புச்சொல் என்னும் இவ்விலக்கணக் குறியீட்டினை,

“வளியென்றும் மாடனுகாது வசைவரும் என்று, அனைய
தெளியொன்று சிற்றிடைக்கோ பகை? செம்பொற் சொரியன்ன
களியொன்று கொங்கை, களிவண்டுகாள்! குழல் காதலிப்பின்
அளி என்ற நாமம் குறிப்பாம். வெளிப்படை ஆவதின்றே”

எனக் கச்சியப்ப முனிவர் தமது தணிகைப் புராணத்திற் களவுப் படலத்தின் கண்ணும்,

“வீடு புறம்நீ வேண்டற்க! ஐய எமது விளங்குமணி
மாடம் நினதே இவண்உறைக! அரசர் கோமான் மகள்இதய
பீடம் அதனில் உனைவிடாது இருத்தி யிருந்தாள்! பிரிவறநீ
கூட வுறையும் விருப்புடையள்! என்றான் குறிப்பு வெளிப்படவே”

எனச் சிவப்பிரகாச சுவாமிகள் தமது பிரபுலிங்க லீலையின் கண்ணும்,

“செறிப்புறு வான்புகழ்க் கோடீச் சுரேசர் சிலம்பிடைநாம்
உறுப்பமை நன்னூல் இடைநீடும் ஐம்பால் உறதொடர்பைச்
சிறப்புறு கேள்வி பெறுபாங்க னுக்குத் தெளிவுபெறக்
குறிப்பினும், ஓதும் வெளிப்படைச் சொல்லினும் கூறுதமே”

எனக் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் அவர்கள் தாம் இயற்றிய கோடீச்சுரக் கோவையின் கண்ணும், தத்தமது பாடல்களில் பயின்று வரச் செய்துள்ள பான்மை மிகவும் சுவைத்துணர்ந்து மகிழற்பாலது. (தொடரும்)

---

exists to express one's thought, next Talleyrand's well known mot that language exists to hide one's thoughts, and lastly Soven Kierkegaard's improvement of it, that language is used by many people to hide the fact that they have no thoughts."

—*Otto Jespersen, Mankind Nation and Individual.*

# சிவப்பிரகாசப் பெருந்திரட்டு*

## ஆராய்ச்சிக் குறிப்புகள்

(திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு)

இப் பெயர்கொண்ட நூலைக் கோ. வடிவேலு செட்டியார், மங்கலம் - சண்முக முதலியார் ஆகிய இருவரும் 1912-ல் வெளியிட்டார்கள். இப் பதிப்புக்குத் துணைசெய்த 11 சுவடிகளை உதவியவர்கள் : (1) சிதம்பரம் - பொன்னம்பல சுவாமிகள் மடம் ; (2) சென்னைத் தொண்டமண்டலம் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் ஆதீனத் தம்பிரான் சிவப்பிரகாச ஐயர் ; (3) சென்னை, மாகாண மாஜிஸ்ட்ரேட் பூ. இராஜரத்ன முதலியார் ; (4) மதுரைத் தமிழ்ச் சங்கப் பாண்டியன் சுவடிச்சாலையினர் ஆகியோர் ஆவர். இவற்றில் மதுரைத் தமிழ்ச் சங்க ஏடு, குறிக்கத்தகுந்த பழமையான முழு ஏடு. இந்த ஏட்டினைச் சங்கத்திற்கு உதவியவர் விருதைச் சிவ ஞான யோகிகள் ஆவர். அவர் தந்த ஏட்டின் இறுதியில், ஏடு எழுதியவர் வேறு சில குறிப்புகளும் எழுதி இருக்கிறார். அக் குறிப்பு பெரிதும் பயன்படும் என்று கருதிச் சுவடியில் உள்ளபடி செந்தமிழில் (1903 தொகுதி 1: பக்கம் 285-289) வெளியாயிற்று. அப் பகுதி வருமாறு :

"†ஆகக் கலைக் கட்டளை, அனுபவக் கட்டளை கவடு 2-க்குப் பணை 28-க்குக் கொம்பு 218-க்குச் சிவக்கனியாகிய திருப்பாட்டு 2813. காப்பு 2, பொழிப்புரை 9, ஆக 11. ஆகப்பாட்டு 2824-க்குப் பொழிப்புரை காப்பு 11 போக, அதிகாரம் 218-க்குத் திரட்டின பாட்டு 2800. சொரூபானந்த சுவாமி திரட்டின பிறகு, தத்துவ தேசிக நாயனார், தத்துவ தேசிகமென்று ஒரு சாஸ்திரம் பண்ணிக் குறுக்திரட்டுத் திரட்டின பிறகு, பெருந்திரட்டிலேயும் அதிகாரம்

---

*செந்தமிழ் (மதுரைத் தமிழ்ச் சங்கம்) முதல் தொகுதி, பக்கம் 285-289 ; ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் தொகுதி 38 பக்கம் 15-18 பார்க்க.

†மூல நடையை அப்படியே தழுவிச் சந்தி பிரித்து, இக்கால இலக்கணப்படி நடை படிப்பதற்கு எளிதாக்கப்பட்டது.

கண்டு சேர்த்த பாட்டு 13. ஆக அதிகாரம் 218-க்கு பாட்டு 2813. பாயிரங் காப்பு 11. ஆகப் பாட்டு 2824. சிவப்பிரகாசப் பெருந்திரட்டு முடிந்தது. முற்றும்."

"சகாத்தம் 1601-ல் (1679) செல்லா நின்ற கொல்லம் 854-ம் ஆண்டாகிய காளயுக்திளு புரட்டாசிமீ 13உ சனி வாரமும் சரஸ்வதி பூசையாகிய சுப நவமியும்பெற்ற முகூர்த்தத்திலே சொரூபானந்தர், தத்துவ தேசிகர் சந்தானத்தில் சங்கரானந்த சுவாமி திருவடிபெற்ற சுயம்பிரகாச யோகி எழுதி முடித்த திரட்டுப் பார்த்து எழுதினது. துன்மதிளு புரட்டாசிமீ 18உ பூர நக்ஷத்திரத்தில் எழுதி முடிந்தது. விநைதீர்த்த வாத்தியார் புத்திரன் விநைதீர்த்தார். சொரூபானந்தர் செய்தது, சிவப்பிரகாசப் பெருந்திரட்டு. தத்துவ தேசிகர் பண்ணினது, குறுந்திரட்டு 1400. தத்துவ தேசிகர் சந்தானத்திலே 35-ம் சந்தானமாகிய சுயம்பிரகாசயோகி தேவாரம் திருவாய்மொழிகளை அடுத்து ஆயிரத் திரட்டாக அதிகாரம் 52-க்குப் பாட்டு 1100 சங்கர நாராயணத் திரட்டு என்று திரட்டின திரட்டு ஒன்று சங்கர நாராயணர் கோயிலிலே இருக்கும். புத்தியுள்ளோர் விசாரித்து எழுதிக்கொள்ளவும்."

"சொரூபானந்தர் திருநெல்வேலிக்கு வடக்கு, ஆற்றங் கரை ஓரம் சேந்தமங்கலத்திலே பரிபூர்ணமாகித் திருக் கோயிலும் உண்டாகித் திருச்சிற்றம்பலம் உடையார் என்று பூசைகொண்டு அருளுகிறார். சகாத்தம் 597-ல் செல்லா நின்ற யுவளு மாசிமீ திரட்டி முகிஞ்சது பெருந் திரட்டு என்று அறிக. அடைந்த தினம் வைகாசிமீ வியாழக்கிழமையும் கேட்டை நக்ஷத்திரமும் ஏகாதசியும் என்று சேந்தமங்கலத்துக் கோயிலிலே குருபூசை நடத்தி வருகிறோம்."

"தத்துவ தேசிக நாயனர் சிதம்பரத்திற்கும் விருத்தாசலத்துக்கும் நடுவே இருக்கிற எறும்பூரிலே பரிபூரணமானர். பூரணமான தினம் ஆடிமீ சனிக்கிழமையும் சதய நட்சத்திரமும் பிரதமையும். இந்த தினத்திலே தத்துவ தேசிக நாயனருக்கு எறும்பூரிலே திருக்கோவிலும் முகிச்சுக் கமலபீடமாக நித்திய பூசையும் குரு பூசையும் நடந்துவருகிறது. எறும்பூருக்கு வடமேற்கு 10 நாழிகை வழியிலே விளாங்குளத்திலே இருக்கிற சந்தானக்காரர்

எறும்பூர் சமாதிக் கோயிலுக்கு நித்தியப்படி பூசை நடத்தி வருகிறார்கள். திருச்சிற்றம்பலம்.

## கைலாச சந்தான பாரம்பர்யம்

1. கைலாசமூர்த்தி (பரமேஸ்வரன்)
2. நந்திகேசுரர்
3. சனற்குமாரர்
4. வேதவியாசர்
5. சூதர்
6. கடவுன் நாதர்
7. தருவைச் சித்தர்
8. சித்த வேடத்தவர்
9. மேழையில் அருள்முனிவர்
10. பரமுனி
11. திருப்பனந்தாள்முனி
12. திருச் சேமவைப்பு
13. வடமுனி
14. உய்யவந்த நாயனர்
15. நடராஜர் I
16. சொரூபானந்தர் I
17. சிவப்பிரகாசர் I
18. சொரூபானந்தர் II
19. தத்துவதேசிகர் I
20. ஜோதிப்பிரகாசர்
21. அறிவானந்தர்
22. பூரணப்பிரகாசர்
23. ஞானானந்தர் I
24. சொரூபானந்தர் III
25. தத்துவப்பிரகாசர் I
26. சதானந்தர் I
27. தத்துவானந்தர்
28. சிவப்பிரகாசர் II
29. நடராஜர் II
30. பரிபூரணப்பிரகாசர்
31. சித்தானந்த பூரணர்
32. அனந்தானந்தர்
33. தத்துவப்பிரகாசர் II
94. சிவானந்தர் I
35. சுயம்பிரகாசர் I
36. சொரூபப் பிரகாசர் I
37. ஞானப்பிரகாசர்
38. ஞானானந்தர் II
39. சத்தியப்பிரகாசர்
40. சின்மயானந்தர்
41. பூரணானந்தர்
42. சொரூபானந்தர் IV
43. அநுபவானந்தர்
44. சிவானந்தர் II
45. விமலானந்தர்
46. சதானந்தர் II
47. தத்துவ தேசிகர் II
48. ஞானவினோதர்
49. சச்சிதானந்தர்
50. சுயஞ்சோதியார்
51. சொரூபப்பிரகாசர் II
52. சுயம்பிரகாசர் II
53. சங்கரானந்தர்
54. ஷையார் திருவடிபெற்ற சுயம்பிரகாசர் III

ஆகச் சந்தான குரவர் 54. சகாத்தம் 1601-ல் சுயம்பிரகாச யோகியார் எழுதின திருமுறை பார்த்து எழுதினது.

"18-ம் சந்தானம் சொரூபானந்தர் திரட்டினது பெருந் திரட்டு. 19-ம் சந்தானம் தத்துவ தேசிகர் திரட்டினது

குறுந்திரட்டு. பரணிப் பிரபந்தம் முழுதும்செய்தது. 20-ம் சந்தானம் ஜோதிப்பிரகாசர். 21-ம் சந்தானம் அறிவானந்தர். அறிவானந்தருக்குப் பிறகு விளாங்குளத்துச் சந்தானம் ஒரு விதமும் சங்கரானந்த சம்பிரதாயமும்[என] இரண்டு வகையாய் இருக்கும். மற்ற உளுந்தூர், மணலூர் முதலான சந்தானக்காரரும் வீரசைவமாய்ப் போனார்கள். சிவஞானம் வேண்டியபேர் தேடிக்கொள்ளவும். இந்தத் திரட்டு எழுதுகிறபேர் எல்லாம் இந்தப்படி வக்கணை விடாமல் எழுதவும். கலைக் கட்டளை முழுதும் அறிவித்த பிறகு, சம்பிரதாயக் கட்டளை "ஊன் உயிர் வேறு செய்தல்" முதல் குரு தரிசன உபசாந்தமட்டுள்ள தசகாரிய சம்பிரதாயங்களைச் சமாதியிலே இருத்தி அறிவிக்கிற சிவயோகி யார் உண்டோ, அவனே தத்துவ தேசிகனார் திருவடி சம்பிரதாயம் உடையவன் என்று அறியவும். தான் துறவு இல்லாமல் இந்நூலைப் போதிக்கிறேன் [என்றாலும்] கிரியைக்குள்ள பீடார்ச்சனையாவது, சாயுச்ச லிங்கமாவது பண்ணிக்கொண்டு திரட்டு சந்தானம் என்று சொன்னாலும் அல்ல என்று தள்ளிவிடுகிறதேயல்லாமல் கைக்கொள்ளக் கடவதல்ல. திரட்டுச் சந்தானக்காரன் அடையாளம் ஏதென்றால் புறத் துவக்குத் துறந்து அகத்துறவும் வந்து, திரட்டிலே தள்ளி இருக்கிற சமய சங்கற்பம் பிராந்தி அஷ்டாங்கயோகம் இவைகளிலே சாராதவனாய்த் திரட்டிலே சொன்னபடிக்கு........ஞானசாரமும் பிட்சையும் ஞா[ன] பூசையுமே செய்யும் அனுஷ்டானமும் தசகார்யப்படி சிவயோகமும் உடையவன் ஆனால், அவனே உயிருக்கு உயிராய் இருக்கிற பொருள் என்றும், சொரூபானந்தர் தத்துவ தேசிகர் என்றும், எம்மை ஆண்ட சங்கரானந்த யோகி என்றும் கைக்கொண்டு, திரட்டிலே உள்ள அனுபவம் கேட்டால் சிவஞானத்தைக் கொடுப்பான். பேரின்பம் பெறலாம். மற்றவன் திரட்டை எடுத்தாலும் அவன் செய்யும் கிரியைக்குக் குற்றம் சொல்லுகையாலே அவனைக்கொண்டு பெறும் காரியம் இல்லை என்று அறியவும். இது எல்லாம் சிவஞான'சாதகருக்காக எழுதினோம். சிவஞானம் பெறுவோர் எல்லாம் நம்மடத்துச் சந்தானம் ; ஆகையாலே சகல விவேகிகளும் பார்த்துக்கொண்டு இந்தத் திரட்டு எழுதுகிறபேர் எல்லாம் ஓர் அக்ஷரம்விடாமல் எழு

திப்பரம சுகம்பெறவும். 20 திருச்சிற்றம்பல முடையார் திருவடி வாழ்க. சொரூபானந்த சுவாமி திருவடி வாழ்க. சிவசுந்தர ஜோதி திருவடி வாழ்க.''

'இலக்கிய மணிமாலை'யில் திரு. வையாபுரிப் பிள்ளை அவர்கள் தொகை நூல்கள் (பக். 11) பகுதியில் இந்நூலினைப்பற்றி எழுதியுள்ள குறிப்புகள் வருமாறு :—

"வேறொரு தொகை நூலையும் இங்கே குறிப்பிடுதல் தகும். இது 'சங்கர நாராயணத் திரட்டு' எனப் பெயர் பெறும்; தத்துவ தேசிகர் சந்தானத்தில் 35-ம் சந்தான மாகிய சுயம்பிரகாச யோகியார் தேவாரம் திருவாய் மொழிகளில் 1100 செய்யுட்களை எடுத்து 52 அதிகார மாகப் பகுத்து ஆயிரத் திரட்டாகத் தொகுத்தது."

"சமயச் சார்பான இத்தொகை நூல்களை அடுத்து நாம் கவனித்தற் குரியன 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு' 'குறுந்திரட்டு' என்பன. * * * இவை திரட்டப்பட்ட காலம் 14-ம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியாக இருத்தல்கூடும். * * * இதுகாறும் அறியப்படாதனவும் வெளிவாதனவுமான பல நூல்கள் இப் பெருந்திரட்டிலே எடுத்தாளப்பட்டுள்ளன. இந்நூலை நோக்குமிடத்துத் தொகுக்கும் நெறி முற்கூறிய அனைத்திலும் வேறாய் மாறிவிட்டமை புலனாகும். தத்துவக் கொள்கைகளை மேற்கொண்டு தொகை செய்தலே இந் நெறியாம்." (புறத்திரட்டுப் பதிப்பு முன்னுரை.)

கோயிலூர் அ. இராமசாமிச் சுவாமி பதிப்பித்த குறுந்திரட்டுப் பதிப்பில் (1888) நூலின் இறுதியில் இந்நூலினைப்பற்றிப் பின்வரும் குறிப்பை வெளியிட்டுள்ளார். "குறுந்திரட்டு இப்போது அநேகம் பிரதிகளைக்கொண்டு ஒருவாறு ஆய்ந்து அச்சிட்டனம். பெருந்திரட்டு அச்சிட ஆலோசித்து ஆராய்ச்சிசெய்து வருகின்றனம். இன்னும் சில பிரதிகள் கிடைத்தற்கு எதிர்பார்க்கின்றமையால் பிரதி வைத்திருப்போர் அவசியம் அனுப்பவேண்டியது; அனுப்பினால் அதையும் வைத்து ஒத்திட்டு அச்சிடப்படும். ஏன் பல பிரதியை விரும்புகின்றோம் என்றால்? திரட்டு அருளி, அதிகாரன் அனபடியாலும், ஒரு பிரதிக்கு ஒரு பிரதி பரஸ்பர விரோதமாய் இருக்கின்றமையாலும், ஏடுகள் சிதல் அரித்து விட்டமையாலும், அனேகம் பிரதிகள்

வேண்டியிருக்கிறது. இந்நூல்களை அனேகம் பேர்கள் அச்சிட்டுவருகிறோம் என்றும், அச்சிடப்போகிறோம் என்றும், விளம்பரத்தில் காட்டியும், நாளதுவரையில் அச்சிடவில்லை. அது யாது காரணத்தாலோ? அவ்வவர்களே அக்காரணத்தை ஆலோசித்து அறியவேண்டியது."

---

# பிள்ளையார் சதுர்த்தி ஒரு தேசீய விழா

(நல். முருகேச முதலியார்)

பிள்ளையார் சதுர்த்தி நாடெங்கும் கொண்டாடப்படும் ஒரு பெருவிழா. பிள்ளையார் வழிபாடு இப் பாரத நாட்டில் மட்டுமன்றி மெக்சிகோ முதல் ஜப்பான் வரை பல தேசங்களில் தொன்று தொட்டுப் பற்பல வேறுபாடுகளுடன் இருந்து வந்ததென்று ஆலிஸ்கெட்டி என்ற அம்மையார் தமது "கணேசர்" என்ற பெரிய நூலில் (கிளாரெண்டன் பிரெஸ்) விரித்து எழுதி யுள்ளார்கள்.

இந்த விழா இமயம் முதல் குமரி வரை எல்லா இந்துக்களுக்கும் சமய வேறுபாடின்றி உடன்பாடான ஒருவிழா. சமயம் மட்டுமல்ல; சமூகத்தையும் ஒன்று சேர்க்கும் விழாவென்று கூறுவது மிகையாகாது. சமீபகாலத்தில் ஸ்ரீ பாலகங்காதர திலகர், கணேச சதுர்த்தி விழாவினாலேயே மகாராட்டிர தேசத்தின் ஒற்றுமையையும் பலத்தையும் வளர்த்தாரென்பது சரித்திரத்தில் காணும் ஒரு செய்தி.

இந்த விழாவில் பாலர்முதல் படித்த பக்குவர்கள்வரை எல்லோரும் விரும்பி ஆர்வம் கொள்வது உலகமறிந்த விஷயம். இது பணக்காரர்கள் ஏழைகள் என்ற வித்தியாசமில்லாது அனுட்டிக்கப்படும் ஒரு விரதமும் விழாவும் ஆகும்.

சிறுவர்கள் படிப்பு துவக்கும் காலத்தில் "விநாயக நமோத்து சித்தம்" என்று ஓதித் துவக்குவார்கள். பிள்ளையார் பாடல், அகவல், பள்ளியில் சிந்து முதலியவைகளை அவர்களுக்குக் கற்பிப்பது வழக்கம். பள்ளிச் சிறுவர்களுக்கு உகந்த கடவுள் பிள்ளையாராவர். பரீக்ஷை சமயங்களில் மாணவர்கள் (கல்லூரி மாணவர்கள் கூட) பிள்ளையாருக்கு

வேண்டிக்கொண்டு தேங்காய் உடைப்பது கண்கூடான விஷயம். கணபதியைப் போல் காக்கும் கடவுள் வேறில்லை.

பிள்ளையார் சதுர்த்தி விழா ஒரு கலை விழாவும்கூட. கணேசர் விக்கிரகங்கள் எல்லா விடங்களிலும் செய்யப் பட்டு அலங்காரம் செய்யப்படும். முக்கியமாக இளைஞர்கள் இதில் பங்கு கொள்ளுகிறார்கள்.

இத்தகைய விழாவிற்குத் தமிழ் நாட்டில் இவ்வாண்டு முதல் விடுமுறை விடாதது மிகவும் வருந்தத்தக்கது. உதாரணமாகத் தீபாவளி முதலிய சிலவிழாக்கள், விடு முறைக்கு உரியதாயிருக்கின்றன. தீபாவளிக்குள்ள சிறப் போ முக்கியத்துவமோ பிள்ளையார் சதுர்த்திக்கு இல்லையா என்று சிந்திக்க வேண்டும்.

சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் தாம் சென்னை முனிசிபல் காரியாலயத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்த போது விநாயக சதுர்த்திக்கு விடுமுறை விடாத காரணம்பற்றி வேலையிலிருந்து ராஜிநாமா செய்தார் என்று அவர் வாழ்க்கை வரலாற்றிலிருந்து அறிந்து கொள்ளுகிறோம். இவ்விரதத்தின் சிறப்பை இந்த ஒரு செய்தியே தெள்ளிதில் விளக்கும்.

விடுமுறை இருந்தாலும் சரி இல்லா விட்டாலும் சரி, மக்கள் பிள்ளையார் சதுர்த்தியைக் குறைவின்றிக் கொண் டாட வேண்டும். பொது நிலையங்களில் கூட ஆயுத பூசை மதவித்தியாசமின்றிக் கொண்டாடப்பெறும் இந்நாட்டிலே, எல்லோர்க்கும் க்ஷேமத்தை எய்துவிப்பதைக் குறியாகக் கொள்ளும் பிள்ளையார் பூசையும் கைவிடப்படலாகாது. தனிப்பட்ட ஆன்மாவிற்கு மட்டுமன்றிச் சமூகக் கூட்டத் திற்கே இகபர நலங்களை ஆக்கவல்லது கணபதி தத்துவம். இடையூறுகளை விரும்பார், கணபதியை விரும்புவர்; இத் தகைய மூத்த பிள்ளையாரின் நல்விழாவிற்கு ஒரு விடுமுறை யில்லாத போயினமை ஒரு பெருங்குறையே யாகும். விவேகிகள் சிந்திப்பார்களாக.

---

# ஒன்பதாம் திருமுறை

(வித்துவான் திரு. ந. சண்முக சுந்தர தேசிகர்)

திருமுறை என்ற சொல்லின் பொருள் : பாடுவோரையும் பாடக் கேட்போரையும் இறையுணர்வில் விரைவில் ஈடுபடச் செய்யும் ஆற்றல் இத்திருமுறைப் பாடல்களுக்கு உண்டு. தோத்திரப் பாடல்களில் தலைசிறந்து விளங்குவது.

" திரு " என்ற சொல் பல பொருள் கொண்டு விளங்குவது. ஈண்டு, [1]சிவபரம் பொருளையும், [2]சிவத்தோடு இணைபிரியாதிருக்கின்ற அருளாகிய சக்தியையும், [3]அச்சிவ சக்தியின் துணையால் உயிர்கள் அடையும் பேரின்பத்தையுமே குறிக்கும்.

" முறை " என்ற சொல் பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லாயினும், இங்கு மனக்கோணலை நீக்கி வாழ்க்கை முறையை ஒழுங்கு படுத்தும் நூலையே குறிக்கும். உயிர்களைச் செம்மையான ஒழுங்கு முறையில் இறைவனிடத்துச் சேர்ப்பிக்கும் காரணம் பற்றி முறையெனப் பட்டது.

எனவே, திருமுறை என்பது, உயிர்கட்குச் சிவசக்தியின் துணையால் சிவபரம் பொருளையடையும் பேரின்பப் பெருவாழ்வை முறை செய்து அளிக்கும் சிறப்பினையுடையதாம்.

தொகைச் சிறப்பு : இத்தகைய திருமுறைகள் பன்னிரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இவற்றை அருளிச் செய்தவர் இருபத்தேழு அருளாசிரியர்கள். திருமுறைகளின் எண்ணிக்கையாலும், ஆசிரியர்களின் எண்ணிக்கையாலும் ஒரு தனிச் சிறப்பைக் காணலாம். வான வெளியை நம் அறிவில் அளவிட்டு உணர்தற்கு இருபத்தேழு நக்ஷத்

---

[1]" திருவே, என் செல்வமே " என்ற விடத்து சிவபெருமானையும் ;

[2]" சென்றடையாத திருவுடையானை " என்ற விடத்து அருளாகிய சிவசக்தியையும் ;

[3]" சிவமே பெறுந்திரு எய்திற்றிலேன் " என்ற விடத்துப் பேரின்பத்தையும் குறிப்பதாகும்.

திரங்கள் துணை செய்கின்றன. அதுபோல இறைவனது பேரருள் வெளியின் இயல்பினை நம்மனத்திற்கொண்டு உணர்தற்குத் துணைபுரிந்தருளும் திருமுறை ஆசிரியர்களும் இருபத்தெழுவராய் இலங்குகின்றனர். மேலும், இவ் விருபத்தேழு நட்சத்திரங்களைத்தான் பன்னிரண்டு வீடு களாகப் பிரித்து உணர்ந்து காலதத்துவத்தின் நுண்ணிய ஆற்றலை உணர்கின்றோம். அது போலவே இவ்வாசிரியர் களின் அருள் வாக்குக்களையே பன்னிரண்டு திருமுறை களாகப் பகுத்துணர்ந்து இறைவனது திறத்தினை உணர்ந்து பயன் கொள்ளுகின்றோம்.

புற இருளைப் போக்கிப் பொருள்களைக் காட்டும் சூரியர் பன்னிருவர் என வழங்குகின்றனர். பரிபாடல் எட்டில் "உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும்" எனவரும் தொடரால் காண்க. சூரியர் பன்னிருவர்க்கு வேறு வரலாறு கூறப்படினும், ஈண்டுக் கொள்வது, வான் வழி வீடு பன்னிரண்டில் ஞாயிறு தங்கிவரும் தன்மை நோக்கிப் பன்னிரண்டாமெனக் கொண்டு, அக இருளைப் போக்கி ஆன்மாக்களுக்கு இறை இன்பத்தை உணர்விக்கும் திருமுறையும் பன்னிரண்டாக விளங்குவது இன்புறத் தக்கது.

இனி ஒன்பதாம் திருமுறையின் சிறப்பை நோக்கு வோம். ஒன்பதாம் திருமுறை, திருவிசைப்பா திருப் பல்லாண்டு என இருவகைத்து. இசைப்பா என்பது இசையோடு கூடிய பாடல். திரு+இசை+பா என்பது இறைவனது பொருள்சேர் புகழைப் பரவிப் பேரின்ப வாழ்வோடு இசைவிக்கும் பாடல். இசை என்பதற்குப் பண் புகழ் இசைவித்தல் எனப் பல பொருள்கள் உண்டு. திருவிசைப்பா என்னும் ஒன்பதாம் திருமுறையைப் பாடிய வர்கள் ஒன்பதின்மர். அவர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்பவராவர். இவர்கள் பாடிய பதிகங்கள் மொத்தம் 29. அவற்றிற்குப் பாடல்கள் மொத்தம் 300 ஆகும். இவ்வொன்பதாம் திருமுறையைப் பாடிய ஆசிரியர்கள், வாழ்ந்த காலம் 9 ஆம் நூற்றாண்டு முதல் 11 ஆம் நூற்றாண்டு வரை எனத் தெரிகின்றது.

திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களின் பெயரைப் பின் வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

" செம்பொன்மணி அம்பலத்து நிருத்த னூர்க்குத்
திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்பேர் சொல்லில்
பம்புபுகழ் செறிதிருமா ளிகைமேய்த் தேவர்
பரிவுடைய சேந்தனர் கருவூர்த் தேவர்
நம்பிகா டவர்கோன்நற் கண்டரா தித்தர்
நன்குயர்வே ணாட்டடிகள் திருவாலி யமுதர்
அம்புவியோர் புகழ்புருடோத் தமர்சேதி ராயர்
ஆகஇவர் ஒன்பதின்மர் தாமுறைகண் டடைவே "

ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாவிற்கு மூன்று சிறப்பியல்புகள் உள்ளன.

முதலாவது : ஒன்பது அடியார்கள் பாடிய பத்திப் பனுவல்களைத்திரட்டி அமைத்தது. அடியார் கூட்டத்திற்கே ஓர் தனிச் சிறப்பு உண்டு. மணிவாசகப் பெருமானர் " உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் " என்று பல இடங்களில் கூறியதும் உணர்க. சுந்தரர் அடியார் திருக்கூட்டத்தை வணங்கிப் போற்றியதும், நாவுக்கரசர், திருவாரூரில் எதிர்கொண்ட சிவனடியார்களை வணங்கித் "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்று அருளியிருப்பதும் அடியார் திருக்கூட்டச் சிறப்பை உணர்த்தும்.

ஆகவே, அடியார்கள் கூட்டமென்பதற்குத் தனிப் பெருமை உண்டு. அக்கூட்டத்தினரில் சிலர் இயற்றிய ஒன்பதாந்திருமுறை நம்மவரால் போற்றுவதற்குரிய பெருமை வாய்ந்துள்ளது.

இரண்டாவது : இந்த அடியார்களுக்குள்ளே ஒருவர் அரசராவர். அடியார்களாகிய அரசர்கள் பலருளர். ஒருங்கே அடியாரும் கவிஞருமாகிய அரசர் மிகச் சிலரே யுள்ளார்கள். அரசியல் செயல்களில் மனம் அலைப்புண்டு உழலும் அரசர்கட்குச் சாந்தி கிடைப்பது அருமை. சாந்தி கிடைப்பினும் அச்சாந்தியைப் பயன்படுத்தி இறைவன் பால் தன்னெஞ்சை நிறுவுவது மிக அருமை. இறைவ

னிடத்து நிறுவிப் பத்திப்பாடல் பாடுவது மிகமிக அருமை. அரியவற்றுள் அரிய இச் செயலைச் செய்தவர் திருவிசைப் பாவைப் பாடியோருள் ஒருவராகிய கண்டராதித்த தேவர் என்னும் அரசர்பிரான். இவ்வரசரே யன்றிக் கருவூர்த் தேவர் முதலிய சித்தரும் பிறரும் இத்திருமுறையைக் கண்டவர். இதனாலும் இதன் பெருமை விளங்கும்.

மூன்றாவது: திருக்கோயிலில் வழிபாட்டு முறையில் இறைவனது திருமுன்னிலையில் பஞ்சபுராணம் ஓதும் காலத்துத் திருவிசைப்பா திருப்பல்லாண்டு இரண்டும் இடம் பெறுகின்ற தனிச் சிறப்புண்டு.

பாட்டின் பொருட் சிறப்பு: இந்நூலினகத்தே அதன் உண்மையான பெருமை காணப்படுகின்றது. செய்யுட்கள் அனைத்தும் இசையோடு பாடுதற்கமைந்தன. இது பற்றியே இசைப்பா எனப்பட்டது. அன்றி, இறைவனது புகழின் தன்மைகளை எடுத்துச் சொல்லிச் சிவபரம் பொருளை யடையும் பேரின்ப வாழ்வோடு நம்மை இசைவிக்கும் பாடல் என்றும் கூறலாம். திரு+இசை+பா. உதாரணமாக ஒரு பாடல் காண்போமாக.

[1]கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
[2]கரையிலாக் கருணைமா கடலை
[3]மற்றவ ரறியா மாணிக்க மலையை
[4]மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டு கண்டு
உள்ளங் குளிரவென் கண்குளிர்ந் தனவே.

1. இறைவன் செம்மேனி எம்பிரான் அல்லவா? ஆகவே, பழுத்துச் செக்கச் சிவந்து சுவை மிக்குள்ள ஒரு கனியைப் போலுள்ளான். ஐயறிவில் ஊற்று உணர்ச்சிக்கு அடுத்து நிற்பது சுவையறிவு. புனிற்றிளங் குழந்தை தொட்டுணர்ச்சியோடு சுவை அறிவு ஒன்றுதான் முதலில் அறிய வல்லது. அது நல்ல இசையையோ, நல்ல படத்தையோ, நல்ல மணத்தையோ, கேட்டு, கண்டு, நுகர்ந்து இன்புற முடியாது. காளடைவில் வளர்ச்சியடையும். இறப்புக்

காலத்தும் ஒன்றன்பின் ஒன்றாகக் குறைந்து கொண்டே வரும். சுவையறிவு இறுதிவரை யிருந்து உடலை வளர்ப்பது.

திருவள்ளுவரும், இக்காரணம் பற்றிப் போலும்,

" சுவையொளி யூறோசை நாற்றம் என்றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு "

என முதற்கண் சுவையை வைத்துள்ளார்.

வாய்ச் சுவைக்குரிய பொருள்களிற் சிறந்தது சிவந்த இனிய கனியல்லவா? ஆகவே இறைவனைக் கனி யென்பதில் எத்துணைக் கவிநயம் உளது. இக்கனிதான், பூமியிலே அழுக்கு மண்ணிலே வளர்ந்த கனியா? அன்று. விண்ணுலகத்திலே விரும்பியவற்றை யெல்லாம் கொடுக்கும் கற்பக மரத்தின் கனி.

" வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் "

என்ற இறைவன் இயல்பிற்கேற்பக் கற்பகக்கனி எனக் கூறியிருப்பது மிக்க நயமுடைத்து.

ஆசிரியர் மணிவாசகனார் திருவண்டப் பகுதியில்,

" தடக்கையி னெல்லிக்கனி யெனக் காயினன் "

என்று கூறியிருத்தலைக் காண்க.

" மனிதர்காளிங் கேவம் மொன்று சொல்லுகேன்
கனிதந்தாற் கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசனெனுங் கனி
இனிது சாலவும் ஏசற்றவர் கட்கே " (5—91—7)

கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி. (6—32—1)

மேலும், இக்கனிதான் தோல்முதலியன சீவி உண்ண வேண்டுவதா? அன்று இருக்கின்றபடியே விழுங்கத் தக்கது. ஒரு முறை விழுங்கி அமையக் கூடியதா! அன்று. விழுங்குதல் என்பதற்கு மாணிக்கவாசகர் கூறும் பொருளை நுனித்துக் காணுங்கள். (திருவண்டப்பகுதி 166-167)

" பருகியும் ஆரேன்; விழுங்கியும் ஒல்லகில்லேன் " என்பதாம். " நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும்" பழச்சுவையாயினனைச் சுவைத்து விழுங்கி

யமையாத இனிய செழுங்கனிக்கு ஒப்புக் கூறுதல் எத்தகைய நயமுடைத்து என்பதைச் சிந்தியுங்கள்.

மற்றுப், யாவரும் சுவைத்து நுகரும் சாதாரணக் கனியா? அன்று. கற்றவர் மாத்திரம் சுவைத்து இன்புறக் கூடிய கனியாம். அவனின் திருநாமத்தை, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓதவாராகிய மெய்யுணர்வு பெற்ற கற்றவரே சுவைத்து இன்புறக் கூடியதெனின், எத்தகைய நயம் உடைத்து ஆயுங்கள்.

2. கரையிலாக் கருணைமா கடலை: கனியெனக் கூறிய ஆசிரியர், அக்கனியின் இனிய பண்பினைக் கூறவேண்டி கருணைமா கடல் என்றார். கடல், எக்காலத்தும் நின்று முத்தொழிலையும் செய்யும் ஆற்றல் படைத்த ஒன்று. அத்தன்மையுள்ள கடலை இறைவனுக்கு உவமை கூறியது நயமுடைத்து.

காணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்களே சென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பு என்றிவை யிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

என மணிவாசகனாரும், "கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி" என சேக்கிழாரும் அருளிய வாக்கைச் சிந்திக்க.

இறைவன் உயிர்களிடத்து அளவு இலாத பாரபக்ஷம் அற்ற கருணை உடையோன் என்பதைக் குறிக்கக் கரையிலாக் கருணை என்றார். எண் குணங்களில் ஒன்றாய் விளங்குவதும் பேரருளுடைமை என்பதை நோக்க மிக நயமுடைத்து.

3. மற்றவரறியா மாணிக்க மலையை: அளக்கலாகாப் பெருமையும் அளக்கலாகா நிலையும் உடைய இறைவனை மலையென்று உவமித்தல் மிகச் சாலச் சிறந்தது. அம்மலையும் ஒளி பொருந்திய மாணிக்க மலையாம். எவ்விடத்தும் ஒளிமயமாக, ஒளிப் பொருள்களுக்கெல்லாம் ஒளியாய், விளங்கும் சோதியை மாணிக்கமலை என்றது சிந்திக்கற்பாலது.

"சோதியே, சுடரே" என ஒளி வீசுகின்ற மாணிக்க மலையாக விளங்கினாலும், பதிஞானமில்லாமல்-மெய்யுணர்வு இல்லாமல் - இறைவனை உணரும் மெய்க்கல்வி கல்லாதார்

அறியாத மாணிக்க மலையாக இருக்கின்றார் என்பது போற்றுதற்குரியது.

> கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
> கல்லாதார் காட்சிக் கரியார் போலும். (6—89—7)
> கள்ளமுள்ள மனத்தவர் காண்கிலார். (5—80—6)

4. மதிப்பவர் மன மணி விளக்கை: "சோதியே, சுடரே" "ஒளிவளர் விளக்கே" என்று ஞானவடிவாக, இருக்கும் இறைவனை இவ்வாறு ஆன்றோர் கூறுவர். புற இருளை நீக்கும் விளக்கைப்போல, உயிர்களின் ஆணவ இருளை நீக்கித் திருவடி இன்ப ஒளியைத்தருவதால் விளக்கு என்றார். அவ்வின்ப அறிவு ஒளி மனத்தின் கண்ணே உணர்ந்து தெளியப்படுதலின் மன மணி விளக்கு என்றார். அப்பர் பெருமானும்,

> காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
> நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய ஆட்டிப்
> பூசனை ஈசனுர்க்குப் போற்றவிக் காட்டினோமே. (4—76—4)

> " தாயினும் நல்ல தலைவரென் றடியார்
> தம்மடி போற்றிசைப் பார்கள்
> வாயினும் மனத்தும் மருவி நின்றகலா
> மாண்பினர் காண் " (3—123—5)

எனச் சம்பந்தரும் கூறியிருத்தலைக் காண்க.

எல்லோருடைய மனத்தின் கண்ணும் மணிவிளக்காக இருப்பவனோ? இல்லை.

" நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன் "

" அஞ்செழுத்தும் நினைவார்க்கென்றும் அருந்தவன் காண் "

" மலர்தூவி நினைந்தெழுவா ருள்ளம் நீங்காது இருந்தவன் காண் "

> " காலையும் மாலை கைதொழு வார்மனம்
> ஆலயம் ஆரூர் அரநெறி யார்க்கே "

> " சகமலா தடிமை யில்லை தானலால் துணையு மில்லை
> நகமெலாம் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
> முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
> அகமலாற் கோயி லில்லை ஐயன் ஐயாற னார்க்கே "

என்ற அப்பர் வாக்காலும் ;

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்"

என்ற குறட்பாவில் பரிமேலழகர் "மலர்மிசை" என்பதற்கு "அன்பரது மனத்தாமரையின் கண்" என்ற உரை விளக்கத்தாலும், தன்னை இடைவிடாது நினைத்து மதித்துப் போற்றுவார் மனத்தின் கண்ணே மணி விளக்காக இருப்பன் என்று கூறியிருத்தல் மிக நயமுடைத்து.

முடிவு: இத்தகைய அரும்பாடல்களைக் கொண்டு, உயிர்களை இறை இன்பத்தில் திளைக்கவைக்கும் திருமுறைகளை, நாம் அறிந்து போற்ற வேண்டுவது நமக்குரிய பெருங் கடமைகளுள் ஒன்றாகும். திருமுறைகளே நமக்கு உயிர்த் துணையாய், இம்மை மறுமை நலங்களை நமக்கு அருளவல்ல சிறப்புடையவை. அவைகளை நாம் இடையறாது ஓதி உய்ய முயலுவோமாக!

---

## சமாஜ அன்பர்களுக்கு வேண்டுகோள்

"சித்தாந்தம்" இப்போது நல்ல முறையில் வருவதை மெச்சி, இன்னும் விருத்தி செய்ய வேண்டுமென்று பல அன்பர்கள் கோரியிருக்கிறார்கள்.

சந்தாதாரர்கள் இன்னும் பெருவாரியாகச் சேர்க்கப் பட்டால் இந்த விருப்பத்தை நிறைவேற்ற உதவியாயிருக்கும். எனவே, ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு புது சந்தாதாரரையாவது சேர்க்க வேணுமாய்க் கேட்டுக் கொள்ளப்படுகிறது. சந்தாத்தொகை ரூபாய் மூன்றை மணியார்டர் மூலம் அனுப்பவும். சரியான முகவரியும் தெரிவிக்க வேண்டும்.

இந்த ஆண்டு முடிவுக்குள் குறைந்தது புதிய சந்தாதாரர்கள் ஐந்நூறுவது சேர்க்கப்பட வேண்டும். எனவே சமாஜ மாவட்டப் பிரதிநிதிகளும் தனிப்பட்ட அங்கத்தினர்களும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்குமாறு பெரிதும் வேண்டப்படுகின்றனர். இதைப் பற்றிய எல்லா கடிதப் போக்குவரத்தும் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும்.

செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் சாலை, மயிலாப்பூர், சென்னை-4.

வகுப்பு, சித்தாந்த சிகாமணி - உயர்திரு. க. வச்சிரவேலு முதலியாரவர்களால் சீரிய முறையில் நடைபெற்று முடிவாய் விட்டது. சென்ற 2–9–61 தேதி முதல் ‘சிவஞான சித்தியார்’ வகுப்பு தொடங்கப்பட்டிருக்கிறது. சித்தாந்த சைவர்கள் முறையே இந்தப் பாடங்களைக் கேட்டுப் பயன் அடைவார்களாக. வகுப்பு பிரதி ஞாயிறு மாலை 4 மணி முதல் 6 மணி வரை. கட்டணம் முதலியன இல்லை. பாடம் கேட்க வருபவர்கள் சித்தியார் (சிவஞான முனிவர் உரை) புத்தகத்துடன் செல்லல் நலம்.

புரசைத் திருநெறிக் கழகம் 7-ம் திங்கள் வழிபாடு :— 17–9–61 அன்று காலை திருக்காளத்தியிலும், பகல் 11–மணிக்குத் திருத்தணியிலும் நிகழும். 16–9–61 சனிக்கிழமை இரவு 8–30 மணிக்குச் சென்னை, புரசை, வைக்கோற்காரன் தெருவிலுள்ள வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து அன்பர்கள் புறப்பட எற்பாடாகியுள்ளது.

ஆண்டு விழா : நாகர்கோயில், வடிவீசுவரம் மெய்ந்நெறிக் கழகத்தின் 5-ஆம் ஆண்டு விழா 7–8–61 வியாழன் அன்று நடைபெற்றது. விழாவிற்கு முன்னுள் வாணிக வரி அலுவலர் திரு. ஏ. எஸ். வேங்கடாசலம் பிள்ளை, பி.எ. அவர்கள் தலைமை தாங்கினுர்கள். கழகத் தலைவரும், ஓய்வு பெற்ற பதிவாளரும் ஆகிய திரு. எம். இராமையா பிள்ளை, பி.எ. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். திருவாளர்கள் - வித்துவான் சு. அ. ஆறுமுகம், எம்.எ., பி.டி., வித்துவான் சிவராம கிருஷ்ணன் ஆகியோர் சொற்பொழி வாற்றினர். திரு. சுப்பையா பிள்ளை குழுவினரால், தேவார இசையரங்கு நிகழ்ந்தது. சைவப் புலவர் பண்டித - திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் நன்றிகூற, விழா இனிது நிறை வெய்தியது.

திருமணம்: நமது சமாஜப் பேரன்பரும், நாகர்கோயில் வழக்கறிஞரும் ஆகிய திரு. சி. வள்ளிநாயகம் பிள்ளை, பி.எ., பி.எல்., அவர்களின் இளைய புதல்வி திருநிறை செல்வி-சிவஞானத்திற்கும், மதுரை - திரு. குருசாமிப் பிள்ளை அவர்களின் இளைய புதல்வர் திரு. ஜி. கருவேலன், பி.எ. அவர்களுக்கும், இராமவர்ம புரத்தில் மிகவும் சிறப்புற 24–8–61 வியாழக்கிழமை யன்று திருமணம் நடைபெற்றது. மணமக்கள் இருவரும், “முருகு புணர்ந்தியன்ற வள்ளி போல” நீடினிது நலம் பலவும் பெற்று மகிழ்ச்சி மிக வாழுமாறு சமாஜம் தன் வாழ்த்துதலைத் தெரிவித்துக் கொள்கின்றது.

திருமணம் : நமது சமாஜ ஆயுள் பதிவாளரும், அப்பர் தேவார அடக்கவிலைப் பதிப்பாளரும், திருத்துறையூர் திருநாவுக்கரசு நாயனார் கழகத் தலைவரும், ஷெ யூர் ஊராட்சி மன்ற உபதலைவருமாகிய திரு. கு. ஆறுமுக நயினார் அவர்களது புதல்வர் ஆ. திருநாவுக்கரசு, பி. எஸ்சி.க்கும் (Agricultural Demonstrator, Nellikuppam), மேலப் புதுப்பேட்டை - கிலக்கிழார் - திரு. கே. வாசுதேவ நயினார் அவர்கள் புதல்வி - புனிதவதிக்கும் குறிஞ்சிப்பாடியிலுள்ள மணமகள் இல்லமாகிய காந்திகுடிலில், 28-8-61 திங்கட் கிழமையன்று திருமணம் சிறப்புற நடைபெற்றது. மண மக்கள் எல்லா நலன்களும் இனிது பெற்று வாழ்க என நமது சமாஜம் வாழ்த்துகிறது.



Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.